[22nd September 1958

SRI S. NAGARAJA MONIGAR : இந்த கேள்வியில் " யூஸ்புல் ஆக்டி விட்டீஸ் " என்று சொல்லப்பட்டிருக்கிறது. அப்படியானால் சர்க்கார் செய்யும் காரியங்களில் " யூஸ்லெஸ் ஆக்டிவிட்டீஸ் " என்று கூட இருக்கிறது என்ற அர்த்தம் கொடுக்கப்படுகிறதா ?

MR. SPEAKER : சர்க்காரை எப்படி கேட்க முடியும்? மெம்பரைத்தான் கேட்கவேண்டும்.

*House rent allowance for teachers*

* 392 Q.—SRI M. S. SELVARAJAN : கனம் நிதி அமைச்சர் அவர்கள் தயவு செய்து பதிலளிப்பாரா—

அரசாங்கப் பாடசாலை ஆசிரியர்களுக்கு வழங்கப்படும் வீட்டு வாடகை அலவன்ஸ், உதவி பெறும் பாடசாலைகளின் ஆசிரியர்களுக்கு ஏன் வழங்கப் படவில்லை ?

THE HON. SRI C. SUBRAMANIAM : The Government considered recently the question of paying house rent allowance to teachers in aided schools. They have decided to defer the proposal on account of the heavy commitment by way of expenditure that a grant from the State funds towards such an allowance would involve.

SRI M. S. SELVARAJAN : உத்தேசப்படி எல்லா ஆசிரியர் களுக்கும் வீட்டு வாடகை அலவன்ஸ் கொடுக்க வேண்டுமானால், நமது ராஜ்ய சர்க்காரின் பொறுப்பு உத்தேசமாக எவ்வளவு இருக்கும். எவ்வளவு ஆசிரியர்களுக்கு கொடுக்கவேண்டியிருக்கும் என்று அரசாங்கத்தினிடம் கணக்கு இருக்கிறதா ?

THE HON. SRI C. SUBRAMANIAM : ரூபாய் அளவில் சொல்லவேண்டு மென்றால், வருடத்திற்கு 8 லட்சத்தில் இருந்து 10 லட்சம் வரை செலவாகும்.

SRI T. T. DANIEL : Sir, in view of the fact that the teachers in the Government schools and also in the aided schools are having the very same qualifications and do the very same type of work, is it not just that we should grant the house rent allowance to them also?

THE HON. SRI C. SUBRAMANIAM : Sir, there are many just things which we are unable to achieve and to pay for. That is why this has got to be on a phased programme by which we are trying to meet the needs of the teachers.

SRI A. GOVINDASAMY : சமதர்ம ஆட்சியை நடத்த விரும்புகிற நாம், எல்லா ஆசிரியர்களுக்கும் இந்தச் சலுகை கிடைக்கும் அளவு முயற்சி செய்யவேண்டியது அவசியம் இல்லையா ? இப்பொழுது அரசாங்கத்திற்கு பண நெருக்கடி இருக்கிறதென்றால், பண வசதி எற்படு கிறபோதாவது செய்து கொடுக்குமா ?

THE HON. SRI C. SUBRAMANIAM : சமதர்ம ஆட்சியை ஏற்படுத்த முயற்சி செய்து கொண்டிருக்கிறோம். இன்னும் அது ஏற்படவில்லை. ஆகவே, சமதர்ம ஆட்சியின் அடிப்படையில் செய்ய, சமதர்ம ஆட்சி ஏற்படும் வரை காத்திருக்கவேண்டுமென்று அங்கத்தினர் அவர்கள் சொல்வதாக எடுத்துக்கொள்வதா ?

22nd September 1958]

SRI M. K. SOMASUNDARAM : சர்க்கார் ஸ்கூலில் உள்ளவர்களுக்கு கிடைக்கும் அலவன்ஸ் மாதிரி ஜில்லா போர்ட் ஸ்கூல்களில் வேலை பார்க்கும் ஆசிரியர்களுக்கும் "ஹௌஸ் ரெண்ட்" அலவன்ஸ் கொடுக்க அரசாங்கம் முயற்சி செய்யுமா ?

THE HON. SRI C. SUBRAMANIAM : நான் முன்பே சொன்னேன், அதற்கு செலவு அதிகமாகிற காரணத்தினால் தற்போது எடுத்துக்கொள்ளப் படாமல் ஒத்திவைக்கப்பட்டிருக்கிறதென்று.

SRI T. S. RAMASWAMY PILLAI : Sir, in the phased programme referred to by the Hon. Minister, may I know when will the teachers of the private schools get the house rent allowance?

THE HON. SRI C. SUBRAMANIAM : Sir, as soon as a decision is taken, it will be announced.

SRI R. KRISHNASAMI NAIDU : அரசாங்கம், பள்ளி ஆசிரியர்களுக்கு வீட்டு வாடகை அலவன்ஸ் கொடுப்பது போல், அரசாங்கத்தின் உதவி பெறும் பள்ளி ஆசிரியர்களுக்கு கொடுக்கவில்லையானாலும் கூட, அரசாங்க உதவி பெறும் பள்ளிக்கூடங்களை நடத்தும் மானேஜ்மென்ட்டார் ஆசிரியர்களுக்கு வீடுகள் கட்ட அரசாங்கத்தினிடம் உதவி கோரினால் அரசாங்கம் அவ்வகையில் அவர்களுக்கு மான்யம் கொடுக்க முன்வருவார்களா ?

THE HON. SRI C. SUBRAMANIAM : இப்பொழுது உடனடியாக பெண் ஆசிரியர்களுக்கு வீட்டுவசதி செய்து கொடுக்க ஒரு திட்டம் உருவாகிக் கொண்டிருக்கிறது. அதற்கு முதலிடம் கொடுத்து விட்டு அதற்கு அடுத்த படியாக மற்றவர்களுக்கு வீட்டு வசதி செய்து கொடுக்கக்கூடிய திட்டம் எடுத்துக்கொள்ளப்படும்.

SRI K. RAMACHANDRAN : அரசாங்கம், இந்த வீட்டு வாடகை அலவன்-ஸை எய்டெட் பள்ளி ஆசிரியர்களுக்கு கொடுக்கா விட்டாலும் பள்ளி மானேஜ்மென்ட்டார் ஓரளவு கொடுப்பதற்கு அரசாங்கம் உத்தரவு இடுவார்களா ?

THE HON. SRI C. SUBRAMANIAM : அவர்கள் கொடுப்பார்களேயானால் அதற்கு அரசாங்கம் எந்த விதத்திலும் குறுக்கே நிற்காது.

SRI K. VINAYAKAM : Sir . . .

MR. SPEAKER : The hon. Member must not shout. I have already suggested to the hon. Member that I would not call him if he shouted.

SRI K. VINAYAKAM : Sir, what is the *modus operandi* that I should adopt to catch your eye?

MR. SPEAKER : The world has tried it and it has not succeeded!

SRI P. S. SANTHANAM : சர்க்காரால் நடத்தப்படும் பள்ளியில் வேலை செய்யும் ஆசிரியர்களுக்கு வீட்டு வாடகை கொடுத்தும் அவர்களுக்கு வீடுகள் கிடைக்காமல் தவிப்பது சர்க்காருக்குத் தெரிந்திருந்தும், பாடசாலைகளின் அருகாமையில் வீடுகள் கட்டிக்கொடுக்க ஒரு திட்டத்தை அரசாங்கம் மேற்கொள்ளுமா ?

THE HON. SRI C. SUBRAMANIAM : அதைப்பற்றி இப்பொழுது தெரிவித்தேன். பெண் ஆசிரியர்களுக்கு முதலில் வீட்டு வசதி செய்து கொடுத்து விட்டு பின் மற்றவர்களின் பிரச்னை எடுத்துக்கொள்ளப்படும்.

Sri K. VINAYAKAM : Sir, whereas the Government have committed themselves to a great expense and whereas some managements are willing to pay out of their proceeds, why should the Government stand in their way by regulating the fees to be collected by the managements which only give them a paltry sum which incapacitates them to give this house rent allowance to the teachers even if they so desire?

The Hon. Sri C. SUBRAMANIAM : Sir, we are committed to a policy of free education during the primary stage and I do not think that we can allow even the aided schools to go behind that policy. As a matter of fact, during the course of a few years, even this regulated fee will not be allowed to be collected.

*Agricultural schools*

* 393 *Q.*—**Sri A. VEDARATHNAM** : கனம் நிதி அமைச்சர் அவர்கள் தயவு செய்து பதிலளிப்பாரா—

(அ) இந்த ராஜ்யத்தில் விவசாயப் பள்ளிகள் இருக்கின்றனவா ?

(ஆ) இல்லையானால், அவைகளைத் துவக்க உத்தேசமுண்டா ?

The Hon. Sri C. SUBRAMANIAM : (*a*) There are no agricultural schools under the control of the Education and Agriculture departments. But agriculture as a diversified course has been introduced in the secondary schools in this State.

(*b*) There are no proposals under consideration for opening agricultural schools.

**Sri A. VEDARATHNAM** : ஒரத்தநாட்டில் ஒரு அக்ரிக்கல்ச்சரல் ஸ்கூல் நடந்ததே, அது என்னவாயிற்று ? அதை மீண்டும் நடக்கும்படிச் செய்ய அரசாங்கம் ஏதாவது முயற்சி எடுத்துக்கொள்ளுமா ?

**The Hon. Sri C. SUBRAMANIAM** : அக்கேள்வியை அக்ரிக்கல்ச்சர் மினிஸ்டர் அவர்களிடம் போடும்படி கேட்டுக்கொள்கிறேன்.

Sri T. SAMPATH : Sir, will the Government consider the feasibility of opening these schools wherever there are State agricultural farms?

The Hon. Sri C. SUBRAMANIAM : Sir, this is a matter relating to the Agricultural department. A separate question may be put.

**Sri K. R. NALLASIVAM** : தாலுகாவாரியாக இருக்கக்கூடிய விவசாய அதிகாரிகள் மூலம், 15 நாள் அல்லது ஒரு மாதம் விவசாயத்தைப் பற்றி குறுகிய கால பயிற்சி கொடுக்க பள்ளிக்கூடங்கள் ஆரம்பிப்பதுபற்றி சர்க்கார் யோசனை செய்யுமா ?

**The Hon. Sri C. SUBRAMANIAM** : அதை பள்ளியாக எடுத்துக்கொள்ள முடியாது. பயிற்சி முகாமாக எடுத்துக்கொள்ளலாம். இந்த யோசனையை விவசாய இலாகாவிற்குச் சொல்லும்படி அங்கத்தினர் அவர்களைக் கேட்டுக்கொள்கிறேன்.